உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ அஷ்டாவர்க்கிரரிஷியால்

அருளிச்செய்த

# அஷ்ட்டாவாக்கிரர்கீதை.

சுலோகப்படிவசனம்

---

இஃது

சமிவனக்ஷேத்திரமென்னுங் கோயிலூர்

ஸ்ரீ முத்துராமலிங்க சுவாமிகளின்

ஆதீனத்திற்குரிய

ஸ்ரீ - சிதம்பர சுவாமிகள்

மாணாக்கர்களிலொருவராகிய

அ - இராமசுவாமியவர்களால்

கோயிலூர் ஏட்டுப்பிரதிப்படி

பரிசோதித்து

ஆரணி - குப்புசெட்டியாரவர்கள்

வேண்டுகோளின்படி.

சென்னை:

ஜீவரக்ஷாமிர்த அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சர்வசித்துஸு ஆவணிமீ

---

இதன்விலை அணா-௪.

# புத்தகவிளம்பரம்.

---

இப்புத்தகமும், இலக்கண இலக்கியநூற்றிரட்டுப்புத்தகமும், அத்தொய்தசாஸ்திரத்திரட்டுப்புத்தகமும், இன்னும்பல வேதாந்த சாஸ்திரங்களும், கருமம், பத்தி, யோகத்துக்குரிய நூல்களும், வேண்டியவர்கள் சென்னப்பட்டணம் முத்தியாலுப்பேட்டை பவழக்காரவீதி. கு. ம. பெ. ரி. கடைச்செட்டியாரிடத்திலும்., ரா. ம. மு. கடைச் செட்டியாரிடத்திலும், சிதம்பரம் சைவப்பிரகாச வித்தியாசாலை. ம-ா-ா-ஸ்ரீ பொன்னுச்சாமிபிள்ளை அவர்களிடத்திலும், தஞ்சாவூர் - வடுகத்தெரு ந. வீரபத்திரபிள்ளையவர்களிடத்திலும், மதுரை புதுமண்டபம். ம-ா-ா-ஸ்ரீ புஸ்த்தகவியாபாரம். ஷண்முகபிள்ளை யவர்களிடத்திலும், திருநெல்வேலி மேலரதவீதி, டி. எஸ். சிவராமபிள்ளையவர்களிடத்திலும், கிரயத்துக்குபெற்றுக்கொள்ளலாம்.

வெளியூரார் தபார்கூலியும் புத்தகக்கிரயமும் ஆகிய இவைகளைச்சேர்த்து ரூ மணியார்டர் செய்து புத்தகம் பெற்றுக் கொள்ளலாம்.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# அஷ்ட்டாவர்க்கிரர்கீதை.

---

## முதலாவது,

## உபதேச அதிகாரம்.

அஷ்ட்டாவர்க்கிரரிஷியானவர் பதரிகாவனத்திலிருக்கச்சே பார்க்கவனென்கிற முனீந்திரன் அவருக்குத்தெண்டம்பண்ணிச் சுவாமி யெனக்குத் தத்துவசொரூப மறியச்சொல்லுமையா வென்றுகேட்கத் தயவுண்டானவராய்ச் சமுசயமில்லாதபடிக்குத் தெரியச்சொல்லுகின்றார். (க)

முத்தியி லிச்சையுண்டானதே யுண்மையானால் விஷயங்களிலே இச்சையைவிட்டு விட்டு சமதமருசிமாற்கந் தயை சத்தியம் அமிர்தம்போலே பஜனைபண்ணவேண்டும். (உ)

நீ பிருதிவியுமல்ல அப்பு, அக்கினி, வாய்வு, ஆகாசமுமல்லத்தேகசாட்சியாய்ச்சொல்லக் காட்டப்படாத சித்துருபமாகவுன்னையறி.()

சரீரத்தை வேறாக அறிந்து சிற்கலையிலே பொருந்தியிருந்து பின்னையொன்றும் நினையாமலிருந்தால் அப்போதே பந்தம்விடுபட்டுச் சுகத்தையுஞ் சாந்தியுமடையும் (ச)

நீ பஞ்சபூதமுமல்ல இந்திரியங்களா லறியப்படுகிறவனுமல்ல நீ அசங்கன் நிராகாரனிந்தப் பிரபஞ்சத்துக்குச் சாட்சி நீ இனியென்னசொல்லவேண்டும். (ரு)

அதர்மந் தருமஞ் சுகந் துக்கம் மனதிலே அடக்கி நீகர்த்தாவும் அல்லாமல்போக்தாவும் அல்லாமல் எப்போதும் முக்கியமாகவேயிரு.

சகலத்துக்கும் வெதிர்த்தமாகயிருக்கிரவனொருத்தனே நீ எப்போதும்முத்தனேஇப்படியிருந்துமோகத்தினாலும்வேறேதிருக்குண்டென்றுநினைத்ததே யுனக்குப் பந்தமுண்டாயிற்று (எ)

நான்கருத்தாவென்கிற அகங்காரசர்ப்பத்துக்கு ஏன்பயப்பிடவேண்டும் நான் எதுக்குங்கருத்தா வல்லவென்கின்ற அமிர்தத்ஸதப்பானம்பண்ணிச்சும்மாவிரு. (அ)

நானொருத்தனே நிச்சயமாகவிமலபோத சொரூபமென்கின்ற அக்கினியினாலே தொய்தமென்கின்ற காட்டைச்சுட்டுப்போட்டுச்சோகபயத்தைவிட்டுச்சுகத்தைஅடையும் பிள்ளாய் (கூ)

எந்தவஸ்த்துவிலே ரச்சுசற்பம்போலே இந்தபிரபஞ்சங்காணப்படுகிறதோ அந்தப்பரமானந்தமாய் பிரகாசிக்கின்ற நிசசொரூபமே நீ அதுவே நாமென்று சுகமாயிரு. (க0)

எப்போதுமாங்கரமில்லாத நீ பெத்தனென்கின்ற அபிமானத்தினாலே பெத்தனும் முத்தனென்கின்ற அபிமானத்தினாலே மூத்தனுமாய் மனதெந்தப்படி நினைத்ததோ அந்தப்படியாம். (கக)

ஆத்மாவொருத்தனே, பூரணன், சாக்ஷி, சித்து, விபு, அக்கிரியன், அசங்கன், சாந்தன், இச்சையில்லாதவன், அத்தொய்தன், ஆனந்தன், இப்படிப்பட்ட நீ இல்லாத பிராந்தியினாலே சமுசாரம்போலேயானாய். (கஉ)

இல்லாதபிராந்தியினாலே நீபெத்தனானாய்அந்தவாக்கியபாவம்விட்டுவிட்டுவுன்னைக்கூடஸ்தனென்றும் அத்தொய்தனென்றுமறி. ()

வாரும்பிள்ளாய்புத்திரா நீதேகஅபிமானமென்கின்ற பாசத்தினுலே கட்டுபட்டாய் இனிநான்பிரமமென்கின்ற வாளினாலேஅந்தபாசத்தைஅறுத்துசுகத்தைஅடை. (கச)

நீ நிர்அசங்கன். எப்போதுமிச்சையில்லாதவன், சாந்தன்,சொப்பிரகாசன், ஞானசொருபன், இப்படிப்பட்டவுனக்கு சமாதியிலேயிருப்பனென்கின்றதே பந்தமல்லவோ. (கரு)

இந்தவிசுவமெல்லாமுன்னாலே யுண்டாயிற்று வுன்னிடத்திலே தரித்திருக்கின்றது நீஎப்போதுஞ்சுத்தபுத்தசொரூபம் நீ இதரசிந்தை நினையாதே. (கசு)

ஒருஅபேக்ஷையில்லாமல் விவகாரமுமில்லாமல் நிற்பயனாய்நிர்மலனாய்ச்சலனமில்லாமல் அளவில்லாத புத்தியுடனே சின்மாத்திரவாசனைபண்ணு. (கஎ)

(உபதேசஅதிகாரம் முற்றிற்று.)

---

## இரண்டாவது

## ஆத்மாநுபவ அஷ்டவிம்சதி.

சாகரம் அசத்தியமென்றறிநிராகாரஞ்சத்தியமென்றுநிச்சயம்பண்ணு இந்தத்தத்துவ வுபதேசத்தினாலே மறுபடிசென்ம அருகனாகாய். (க)

கண்ணாடியிலே நிழல்காண்பித்தாற்போலவும்அந்தநிழலுக்குக்கண்ணாடியேஆதாரமானாற்போலவும் இந்தசரீரத்திலெங்கும் பரமேஸ்வரனிருந்தும்அதிலகீப்படான். (உ)

ஏகமாய்ச்சர்வகெதமாய் இருக்கின்ற ஆகாசங்கடத்துக்குள்ளும்புறம்பும் என்று முண்டானாற்போலே நித்தியமாய் இடமில்லாதபிரமம்சகல பூதங்களினு மிருக்கின்றார். (ங)

களங்கமில்லாமல் போதசொரூபமாய் பிரகிருதிக்கி வேருய், சாந்தமாய், நிர்லேபனுயிருக்கின்ற நான் ஓகோ இத்தனைநாளும் மோகத்தினுலே அகப்பட்டாற்போலே ஆனேன். (௪)

நானொருத்தனே இந்தச்சரீரத்தையுஞ் ஜகத்தையும் பிரகாசிக்கப்பண்ணுகிறவன் ஆகையினுலே ஜகத்தெல்லாம்யென்னதுதானே அப்படியல்லவென்றாலும் நல்லதுதானே. (௫)

சரீரத்துடனே இந்தப் பிரபஞ்சம்விட்டு நிர்ச்சலனுய்ப் பரமாத்மாவை யறிந்துகொண்டு அதிசயமான ஆனந்தத்திலே மக்கினனுகவேயிருக்கின்றேன். (௬)

தண்ணீரிலே அலை நுரை குமிழி அபின்னமாக வுண்டாகின்றுப்போல பரமாத்மாவிலே இந்தப் பிரபஞ்சம் அபின்னமாகவேவுண்டாகிறது. (௭)

நூலைவிட்டுப் பிடவையில்லாததுபோலவே விசாரிக்குமளவிற்சின்மாத்திரத்தை விடப்பிரபஞ்சமில்லை. (௮)

கரும்புரசத்தினுலேயுண்டான சர்க்கரை கரும்புரசமேயானுற்போல பூரணபோத சொரூபமாயிருக்கப்பட்ட என்னுலே பிரபஞ்சமுண்டாகப்படுகிறது. (௯)

தன்னுடைய அக்ஞானத்தினுலே ஜகத்துக்காண்பிக்கும் தன்னுடையஞானத்தினுலே ஜகத்துக்காண்பியாது தன்னுடைய பிரமையினுலே பழுதைபாம்பாய்த் தோணினது பழுதையென்றறிந்தால் பாம்பில்லாததுபோல. (௧௦)

என்னுடைய சொரூபம் சொப்பிரகாசம் இதைக்காட்டிலும் மதிகம் வேறில்லை நான் ஆனந்தன் ஆனபடியினுலே எந்தப்படிக்கி ஜகத்துவிளங்கினுலும் நானேவிளங்குகின்றேன். (௧௧)

மண்ணிலேகடம் போலவும் பொன்னிலே பூஷணம்போலவுஞ் ஜலத்திலே அலைபோலவு மென்னிடத்திலே யுண்டானஜகத்து மென்னிடத்திலே அடங்கும். (கஉ)

ஒகோ கற்பிதமான இந்தச்ஜகத்து அச்ஞானத்தினலே என்னிடத்திலுண்டாயிற்று சுத்தியில்ரசிதம்போலவுஞ் சூரியப்பிரகாசத்திற் கண்டகானற்ஜலம்போலவும்பழுதையிற்பாம்புபோலவும். (கங)

உதயாஸ்தமனமில்லாமற் சகலஜகத்தும் நாசமானலும்பிரமாதி ஸ்தம்பபரியந்தம் நானயிருங்கின்ற யெனக்கு நானேநமஸ்க்காரம் பண்ணுவேன். (கச)

ஒகோ தேககாரியாயிருந்தும் போக்குவரத்தில்லாமல் இந்தஜகத்தை நானெருத்தனே வியாபித்திருக்கின்ற வெனக்குநானே நமஸ்காரம்பண்ணுவேன். (கரு)

எனக்குசமமில்லாமல் அச்சமற்றவனய்ச்சரீரத்துடக்குஇல்லாமலிந்தப்பிரபஞ்சமெல்லா மொருத்தனே தரிக்கின்றயெனக்குநமஸ்காரம். (கசு)

ஒகோயெனக்குஇச்சிக்கவேண்டியதொன்றுமில்லை உண்டாயிருந்தாலுஞ்சகலமும் யென்னுதாகவே பிரத்தியக்ஷமாகவே அறிகிறேன் இப்படிபட்டயெனக்குநானேநமஸ்காரம். (கள)

அறிகிறதும் அறியபட்டதும் அறிகிறவனும் இந்தமூன்றும்சகதிஷ்டியினலே பார்ச்க்கசேயில்லை அக்ஞானத்தினலேஉண்டென்கின்றதெல்லாம்நிரஞ்சனஸ் ஆனபடியினலேநானகவேயிருந்தேன். (கஅ)

ஒகோ தொய்தமூலாஞ்ஞானம் துக்கம் அதுக்கொரு மருந்துண்டு அதென்னவென்றற் திரிசியமெல்லாம் பொய் நான் சித்ரூபமான அமலனென்றறிகின்றது. (ககூ)

நான் ஞானமாத்திரம் இந்தஉபாதியெனக்கு அக்ஞானத்திஞலுண்டாயிற்றுஎன்று சிந்திக்கின்ற விசாரமேயெனக்கு நிருவிகற்பத்திலே இருக்கின்றதாயிற்று. (உ0)

ஓகோஇந்த விசுவமெல்லாம் என்னிடத்திலேதானே இருக்கின்றது. எதார்த்தமாகஇல்லை எனக்குப் பந்தமுமில்லை மோட்சமுமில்லை நான் நிருமலனுனபடியினுல் ஒன்றிலும் பற்றுதலுமில்லைப் பிரமையுமில்லை. (உக)

இந்தச்சரீரமுஞ் ஜகத்துமெனக்குச் சற்றுகிலும் நிச்சயமாகவில்லைச் சுத்தசின்மாத்திரமான ஆத்மா நான்தானே ஆகையினுலொருகற்பனையுமெனக்கில்லை. (உஉ)

சரீரஞ் சொற்கநரகம் பெந்தமோட்சம் சிந்தை பயஞ் சுகம் இதுவெல்லாங் கற்பனுமாத்திரம் இதனுடைய காரியஞ் சச்சிதாநந்தமான எனக்கு எம்மாத்திரம். (உங)

ஓகோ தொய்தமில்லாத எனக்கு ஜனமத்தியிலேயுஞ் ஜனங்களில்லாத காடுபோல வேறே நான் என்ன இச்சிக்கப் போகிறேன்.

நான் சரீரமுமல்ல எனக்குச் சரீரமுமில்லை நான்ஜீவனுமல்ல நான் சின்மயன் இதுவேதெளிவு ஆகையினுலே நாசமடைகிற ஜீவன் இச்சையேன் செய்யவேண்டும். (உரு)

ஆனந்தசமுத்திரமாயிருக்கின்ற யென்னிடத்திலே சித்தமென்கின்ற வாயுவினுலே நானுபுலன்களென்கின்ற அலைகள் விசித்திரமாகக் கற்பிக்கப்பட்டது. (உசு)

ஆனந்தசமுத்திரமாயிருக்கின்ற யென்னிடத்திலே மனதென்கின்ற வாயுவடங்கினுல் ஆனியுண்டான சீவவியாபாரி ஜகத்தென்கின்ற ஓடத்துடனேகூடி அமிழ்ந்திப்போனுன். (உஎ)

ஆனந்தசமுத்திரமாயிருக்கின்ற வென்னிடத்திலே சீவனென்கின்ற அலையுண்டாயிருந்தும் அடங்கிப்போகிறது அதினுடையசுபாவமென நினைக்கவேண்டும். (உஅ)

(ஆத்மாநுபவ அஷ்டவிம்சதி முற்றிற்று.)

---

## மூன்றாவது

## உபதேசசதுர்த்தேசம்.

ஆத்மாவொருத்தரே நாசமில்லாதவரென்றறிந்துபிரமக்ஞானதீரனாயிருக்கின்றவுனக்கு விருதாவிருதாஅபேக்ஷையேனுண்டாம் (க)

ஓகோதன்னுடைய அக்ஞானமகிமையினாலே விஷயங்களிலே விருதாப்பிரமை தோன்றிற்று கிளிஞ்சலானது ஞானமில்லாதவனுக்கு வெள்ளியென்று ஆசைதோணினாற்போல. (உ)

சமுத்திரத்திலே அலைகாண்பித்தாற்போல எந்தவஸ்துவிலேஇந்தவிசுவங்காண்பிக்கிறதோ அந்தவஸ்து நீயாயிருந்தும் அதின் விருத்தியினாலே ஏன்தாபப்படுகின்றாய். (௩)

தன்னைமனோகரமான சுத்த சைதன்னியமென்றுகேட்டும் பிறக்கிறதுமிறக்கிறதுமான பந்தத்தினாலே பாவத்தையடைகிற மநுடன் தன்னுடைய அக்ஞானம் தெரியமாட்டாமல் விருதாவிலே கெட்டுப்போகிறான். (௪)

சகல பூதங்களிலேயுந் தானே இருக்கின்றான் பூதகணங்களெல்லாந் தன்னிடத்திலே இருக்கின்றது இப்படியிருந்தும் முனீஸ்பரரே அறிவில்லாதபேயன்தான் வேறென்று நினைப்பான். (௫)

பரமார்த்த அத்தொய்தத்தை மனதிலே விசாரித்து மநுடன் கருமவசனாய் ஐயோ ஏன் சலனப்படப்போரான் (௬)

விபரீதக் ஞானமென்கின்ற சினேகத்துடனே கூடி மந்தப்புத்திக்காரன் சத்துவங்கெட்டு யென்நேரமுங் காமமே இச்சிப்பன் நல்லபுத்தியுண்டானவன் அதைத்திரணமாக மனதிலேநினைப்பன். (எ)

இகலோகபரலோக பலத்தியாகமும் நிர்மலசித்தமும் நித்தியாநித்திய வஸ்துவிவேகமும் உண்டானவனுக்கு மோக்ஷசிந்தையே அதிகமாம். (அ)

தயிரியமுண்டானவன் போகத்தையடைந்தாலும் அனேகதுக்கத்தையடைந்தாலுந் தன்னை நன்ருக வேறென் றறிந்து சந்தோஷமுங் கோபமுமில்லாமலே யிருப்பன். (கூ)

ஆத்மக்ஞானியானவன் தன்னுடையதேகமன்னியமாய்ப் பார்த்துத் துதிநிந்தைகளிலே சந்தோஷமுங் கலக்கமுமில்லாதிருப்பன்.

உற்பத்தியுண்டான இந்தத் திரிசியத்தைச் சகசமாகப்பாரான் இது ஆகுமென்றும் இது அல்லவென்று மொன்றையும் நினையான்.

மனதிலே இச்சையில்லாமல் ஞானமிர்தத்திலே திருப்தியடைந்த மகாத்மாவுக்குச் சரியாக வொருத்தருமில்லை. (கஉ)

நினைப்பெல்லாம்விட்டு நிர்த்தொந்தனுய்ஞானசீலனுய்இருக்கின்றவனுக்குத்தனக்குத்தானேவந்தபோகத்திலே சுகதுக்கங்களில்லை. ()

ஒருசுலோகம் அபாவமென்றறியவேண்டியது.
(மூன்ருவதுவுபதேசசதுர்த்தெசம் முற்றிற்று.)

---

நான்காவது

## உல்லாசசட்கம்.

ஆத்மக்ஞானியாயிருக்கின்ற தீரன் அதிபோகங்களை அநுபவித்துக்கொணிடிருந்து மூடஜனங்களுடனே கூடிக்கோரசமுசாரமென்கின்ற நதியிலே அமிழ்ந்திப்போகான். (க)

எந்தப்பதத்தையடையமாட்டாமற் பிரமஇந்திராதிதேவதைகள் அத்தியந்த தயினியாளா யிருப்பார்களோ அப்படிபட்ட பதத்தைய டைந்தும் யோகீஸ்பரனுனவன் அதிற்சந்தோஷமடையான்.(௨)

பிரமக்ஞானியைப்புண்ணியபாவ பலங்கள் தொடரமாட்டாது நிர்மலாகாசத்தைப் புகைதொடராததுபோல. (௩)

இந்தவிசுவமெல்லாம் ஆத்மாவாகவே யறிந்தமகாத்மா எப்படி நடந்தாலும் அவருக்குவிதிநிஷேதஞ் சற்றுமில்லை. (௪)

பிரமாதிஸ்தம்பபரியந்தமான சதுர்த்தச பூதங்களிலேயுஞ்சற்று ம்பிரியாப்பிரியமில்லாமல் ஞானிசுகமாகவேசஞ்சரிப்பன். (௫)

ஞானுத்தொய்தன் ஜகத்துக்கெல்லாம் நானே ஈஸ்வரனென்றறி ந்து திடநிச்சியனுய் அத்தைவிடாம லிருக்கின்றவனுக்குப் பலபந்த பயம்வராது. (௬)

(நான்காவது உல்லாசசட்கம் முற்றிற்று.)

---

## ஐந்தாவது,

## லயசதுஷ்க்கம்.

நீ விமலன் உனக்கொருசங்கமுமில்லை இந்தப்பிரபஞ்சமெல்லா ம் விடவேண்டுமென்று நினைத்தால் பிரமத்தினிடத்தி லயமாகவே ண்டும். (௧)

உன்னுலுண்டான ஜகத்து சமூத்திரத்திற் குமிழிபோலென் றறிந்து உன்னை வொருத்தனுகவே பாவித்துப் பரதத்துவத்திலே லய மடையவும். (௨)

பிரத்தியக்ஷமாக இருந்தும் பார்க்க அசத்தியமாய்ப் போகிறது ஆகையால் ஜகத்தே உன்னிடத்திலே இல்லை அதெப்படியென்றுல் ரச்சுசர்ப்பம்போல ஆகையால் அதைவிட்டு லயத்தையடையவும்.()

சுகதுக்கம் வந்ததிலும் ஆசை நிராசையிலுங் கிட்டிவர்த மிருத்துவினிடத்திலுஞ் சமனாய் லயத்தையடையவும். (ச)

(ஐந்தாவது லயசதுஷ்க்கம் முற்றிற்று)

---

ஆறாவது.

## உபதேச சதுஷ்க்கம்.

நான் ஆனந்தன் ஆகாசத்தை மேகம்மூடினாற்போல இந்தச்ஜகத்து என்னை மூடித்தென்கின்ற விக்ஞான யுத்தனான வுனக்கு விடுகிறது கிறிகிக்கின்றது லயம் இதுமூன்றுமில்லை. (க)

நான் மகாசமுத்திரம்போலே யிருக்கின்றவன் இந்தப்பிரபஞ்சம் அலைகள்போலே காண்பிக்கிறதென்கின்ற விக்ஞானயுத்தனான வுனக்குத் தியாகமுமில்லைக் கிறிகிக்கிறதுமில்லை லயமுமில்லை. (உ)

நான் சுத்திபோலே யிருக்கின்றேன் என்னிடத்தில் இந்தச் சகத்து ரசிதம்போற் றோணுகிறதென்கின்ற விக்ஞான யுத்தனானவுனக்கு விடுகிறது கிறிகிக்கின்றது லயம் இந்த மூன்றுமில்லை. (ந)

நான்சகல பூதங்களிலேயும் இருக்கின்றேன் என்னிடத்திற் சகலபூதங்களுமிருக்கின்றனவென்கின்ற விக்ஞானயுத்தனானவுனக்குவிடுகிறது கிறிகிக்கின்றது லயம் இந்த மூன்றுமில்லை. (ச)

(ஆறாவது வுபதேசசதுஷ்க்கம் முற்றிற்று.)

---

ஏழாவது

## அநுபவபஞ்சகம்.

ஆனந்தமாய் மகாசமுத்திரமென்னபட்ட என்னிடத்திலே விசுவமென்கின்ற ஓடம் மனதென்கின்ற வாயுவினாலே யெப்போதுந்

திரிகின்றது பார்க்கப்போனாற் பேர்மாத்திரமேயல்லாமல் சற்றுமில்லை (க)

ஆனந்தமாய் மகாசமுத்திரமென்னபட்ட என்னிடத்திற் பிரபஞ்சமென்கின்ற அலைகள் உற்பத்திலயத்தையடைந்தாலடையப்படும் எனக்குற்பத்தி நாசமில்லை. (உ)

ஆனந்தமாய் மகாசமுத்திரமென்னபட்ட என்னிடத்திற் பிரபஞ்சமென்கின்றது கற்பனையென்றறிந்து சாந்தனு யெப்போதும் நிராகாரனாகவே யிருப்பேன். (ந)

பிரமம் சத்தைஅல்லாமல் பாவமேயில்லை அந்தபிரமம் நிரஞ்சனமாய்ஆனந்தமாயிருக்கிறதென்று இச்சையிலே ஆசக்த்தியில்லாமல் நான்உபசாந்தியடைந்திருக்கின்றேன். (ச)

ஓகோ நான் சின்மாத்திரசொரூபன் நானேயிந்தஜகத்து இந்திரசாலம்போலே இருக்கின்றது இப்படிநிருலேபனான எனக்குக் கிறிக்கிறது விடுகிறதென்கிற கற்பனையேஇல்லை. (ரு)

(ஏழாவதுஅநுபவபஞ்சகம் முற்றிற்று.)

---

## எட்டாவது,

## பந்தமோக்ஷசதுஷ்க்கம்.

திரிசியத்தினாற் சித்தமுண்டானாலப்போது பந்தமுண்டாம் திரிசியத்தில் மனமில்லாவிட்டா லப்போது முத்தியுண்டாம். (க)

எப்போதானாலென்ன சிந்திக்கிறதும் இச்சிக்கிறதும் அங்கலாய்க்கிறதுங் கிறிக்கிறதும் விடுகிறதும் சந்தோஷிக்கிறதும் துக்கிக்கிறதுந் தயிரியமில்லாமற்போகிறதும் உண்டாகிறதோ அப்போது பந்தம் பிராந்தியாம். (உ)

எப்போதானுலென்ன மனதி லிச்சிக்காமற் றயிரியப்படாமற் சந்தோஷ துக்கமில்லாமற் ஜீவசலனமில்லாமற் கோபமில்லாமலிருக் கிறதோ அப்போது முத்திப்பிராந்தியாம். (௩)

எப்போதானுலென்ன நானென்கின்ற தில்லாமற் போகின்ற தோ அப்போதே மோக்ஷம் நானென்கின்றதே பந்தம் விவேகியான வா ளிதை யறிந்து வொன்றைக் கிறிகிக்கிறதுமில்லை விடுகிறதுமில்லை இச்சையில்லாதவனுனபடியினுலே. (௪)

(எட்டாவது பந்தமோக்ஷசதுஷ்க்கம் முற்றிற்று.)

---

## ஒன்பதாவது,

## நிர்வேதனையஷ்டகம்.

செய்தாலுஞ் செய்யாமலிருந்தாலுந் தொந்தங்களிலே சாந்த மெவன் அடைகின்ருனே அந்தப்படி நீயும் எப்போதுந் தியாகபரனு யிருக்கின்ற விரதமாயிரு. (க)

இந்தச்ஜகத்து அத்தியந்தஞ் சஞ்சலம் நிட்சாரம் அநித்தியம் தாபத்திரயங்களினுற் றூஷிக்கப்பட்டது துக்கரூபமென்று நிச்சயித் துச் சாந்தமடையவும். (உ)

காலமும்வயதுந் தொந்தமுந் தனக்கெப்படியுண்டாமென் றுசித் தியடைந்த தத்துவக்ஞானி எதாஇச்சையாக சஞ்சரிப்பன் (௩)

என்தகப்பனேகேள்? எவனுக்கானுலென்னஇந்தலோகபிரவர்த் தனைபாற்கின்றபோது சீவனத்துமேலேசிந்தையும் போகத்துமேலே இச்சையும்இமில்லாமலிருக்கின்றதேமகாஆச்சரியம். (௪)

எதீஸ்சுராளுக்கும் யோகீஸ்சுராளுக்கும்மதங்கள்நானுவிதமாகயி ருக்கும் அதுவெல்லாம் பார்த்து மநுட்ஞனவன் வேதனைஇல்லாமற் சாந்தியடையாமலிருப்பானே. (ரு)

தேகத்துவமெல்லாமறிந்த சேதனத்துக்குக் குருவேதுக்கு என் றறிந்தமறுடன் தன்னைசேர்ந்தவனை தரிக்கவேபண்ணுவான். (சு)

பஞ்சபூதத்திலேகற்பிக்கபட்ட விகாரங்களெல்லாம் புத்தியினு லேநன்றாக அறிந்து தொந்தங்களை நீவிட்டதேயுண்டானற் சோதி சொரூபக்ஞானம் உனக்கு இப்போதேயுண்டாம். (எ)

வாசனையேசமுசாரம் வாசனையடங்கினதேமுத்தி ஆகையினுல் வாசனையை யடக்கி யதார்த்தமாகஇருக்கின்றவனே மகாத்மா. (அ)

(ஒன்பதாவது நிர்வேதனையஷ்டகம் முற்றிற்று-)

---

பத்தாவது

## உபசமனஅஷ்டகம்.

அர்த்தமானது அனர்த்தமூலம் மாயாசொருபம்அதிலுஞ்சத்து ருகாமம் இதஇரண்டும் விருதாவென்று விட்டு விட்டு எப்போதும்இ தைஅனுதரவுசெய்யவேண்டும். (க)

சேத்திரம்கிரகஞ் சினேகிதாள் பாரி தனசம்பத்து இது முதலா னதெல்லாஞ் சொற்பனமாத்திரம் இந்திரஜாலம்போலே இன்றைக் கோ நாளைக்கோ நாளைநன்றைக்கோ தெரியக்கூடாது. (உ)

எதின் எதின்பேரி லாசையுண்டாகிறதோ அது அது சமுசாரம் அதுக்குத் திடவைராக்கியம் அடைந்து ஆசையைவிட்டுச் சுகத்தை யடையவும். (ங)

ஆசையே பந்தம் ஆசைவிடுகின்றதே மோக்ஷம் ஆகையால் ஆத் மக்ஞானிக்கி ஆசைவிட்டதே சந்தோஷம். (௪)

நித்தியசுத்த சேதனன் ஜகத்து அசத்துச் சடம் உனக்கவித் தையுமில்லை ஆசையுமில்லை நீ நிர்மலன். (ரு)

இராச்சியம் புத்திரகளத்திரஞ்சுகங்கள்முதலானது சரீரம்விடுகின்றபோது சங்கமாயிருந்தவனுக்குச் சென்மசென்மத்துக்குத் துக்கமே கொடுக்கும். (சு)

அர்த்தங்காமஞ்சுகிர்தங்கரும் முதலானதும் போதும் போதும் இதனாலே சமுசாரதாபம்விடாமல் மனதுசாந்தியும் அடையமாட்டாது. (எ)

மனவாக்குக்காயங்களினாலே நான்இச்சைபண்ணி ஆயுாசமுந் துக்கமுங் கொடுக்கின்றகன்மம் நான்ஒருக்காலுஞ் செய்கின்றதில்லை என்று நிச்சயித்து நித்தியசுகத்தையடையவும். (அ)

(பத்தாவதுஉபசமன அஷ்டகம் முற்றிற்று.)

---

## பதினோராவது
## ஞான அஷ்டகம்.

பாவாபாவமில்லாமற் பரமாத்மாவானவஸ்த்து ஸொபாவமாக வேபிரகாசிக்கிறதென்றறிந்தமகாத்துமா ஒருவிகாரமும் ஒருவிசாரத்தையும் அடையாமற்சுகிப்பன். (க)

ஈஸ்வரனேசகலத்தையும் நிர்மிக்கின்றவன் அவரைத்தவிரசற்றாகிலும்இல்லை இது நிச்சயமென்றுசகலஆசையும் விட்டுவிட்டபரமசாந்தன் பந்தத்தையடையான். (உ)

ஆபத்துவந்தாலுஞ் சம்பத்துவந்தாலும் தெய்வயெத்தனமென்றிருப்பதனுய் சிதேந்திரியனாயிருங்கின்றவன் சுகதுக்கங்களிலே அகப்படான். (௩)

சுகதுக்கம் சென்மம் மிருத்துதோணினாலும் தெய்வயெத்தனமென்றுமெய்யாக அறிந்து யத்தனமும் ஆயாசமும்மில்லாமற்கருமம்பண்ணினாலுங் கருமபலத்தையடையான். (ச)

சிந்தையினாலே துக்கம்வருமேயல்லால் துக்கத்துக்குவேறே வர வழியில்லைஆகையினாற் சிந்தையைவிட்டு இச்சையிலே அகப்படாமற் சாந்தனானவன் திடசுகத்தையடைவன். (ரு)

நான்தேகமுமல்லஎனக்குத்தேகமுமில்லை என்றறிந்தவன் ஒருகாரியஞ்செய்ததும் செய்யாததும் இரண்டும் நினையாமற் கேவலம்சுகத்தையடைவான். (சு)

பிரமாதிஸ்தம்ப பரியந்தம் நானே என்கின்ற நிச்சயாத் மாவானவன் பிரார்த்திய பிரார்த்தி பலத்திலே அகப்படான். (எ)

வெகுவிதமாய் ஆச்சரியமாயிருக்கின்ற இந்தப்பிரபஞ்சமெல்லா மொன்றுமில்லையென்று பயம்விட்டுப்போயிருக்கின்றவன் வாசனையிலே அகப்படாமற் சுத்தஞானசொரூபனாக இருப்பன். (அ)

(பதினோருவது ஞானஅஷ்டகம் முற்றிற்று.)

---

பன்னிரெண்டாவது

## ஏவமேவாஅஷ்டகம்.

தேகமானது சிறிதுகாலங் கிரியாரூபமாயிருக்கும் அதின்பிறகு வார்த்தை சொல்லிக்கொண்டிருக்கும் அதின்பிறகு சிந்தனைபண்ணும் அதுயெப்படி யிருந்தாலும் நான் அப்படியிருந்தேன். (க.)

பிரிதியில்லாதிருந்தால் ஆத்மாவுக்குச் சத்தாவிருத்தியில்லை அதிசயமானபடியினாலே அதைஅறிந்து யேகாக்கிரசித்தனாய் நானென்றும் அறியாமலிப்படியே யிருக்கின்றேன். (உ)

ஆச்சிரமம் அனச்சிரமம் யில்லாத தியான நிஷ்டையிலே சித்தத்திலே தாரணையும் விட்டுவிட்டு ஒருவிகற்பமுமில்லாமல் ஒருத்தனாய்ச் சுகமாய் நானிப்படியே யிருக்கின்றேன் (ங)

சிந்திக்கப்படாத வஸ்துவைச் சிந்திக்கின்றேனென்கின்றவனே சிந்தையுடனேகூடினவன் அந்த ஆயாசபாவனையைவிட்டு நானிப்படியே யிருக்கின்றேன். (ச)

இப்படிஎவனாலே அநுபவிக்கப்பட்டதோ அவனே கிருதார்த்தன் இப்படிப்பட்ட சுபாவமுண்டானவனே மகாபுத்தியுண்டானவன்.

இவையில்மூன்றுசுலோகம்அபாவமென்றறிக.

(பன்னிரெண்டாவதுஏவமேவாஅஷ்டகம் முற்றிற்று.)

---

## பதின்மூன்றாவது

## இதரசுகசத்தகம்.

தன் ஐஸ்வரியங் கௌபீனமுதலாய்இல்லாததாகையாற் தியாகந் தானமிரண்டும் விட்டுப்போட்டு நான்யிதரசுகத்தை அடைந்திருக்கின்றேன். (க)

பார்க்கிறது யெதையாகிலும் பார்க்கட்டும் சிங்குவை யெதையாகிலுமிச்சிக்கட்டும் சித்தம்யெதையாகிலுஞ் சிந்திக்கட்டு மிதுக்கெல்லாம் வேறாய் தத்துவத்திலே நான் சுகித்துக்கொண் டிதரசுசுகமாயிருக்கின்றேன். (உ)

நான்செய்யவேண்டியதொன்றுங் காணேனென்கின்ற நிச்சயத்தினாலே ஒன்றிலுமிச்சையில்லாமற்றனக்குத்தானே வந்ததாகையினாலே நானென்கின்ற அபிமானமில்லாமல் புசித்துச் சுகமாகஇருக்கின்றேன். (ங)

தேகாபிமானமுண்டானயோகிகருமபந்தத்தினாலேகட்டுப்படுவன்அப்படி வியோகம் அபியோகமிரண்டு மில்லாமல்நான்சுகமாயிருக்கின்றேன். (ச)

எப்போதும் பந்தமில்லாமலிருக்கின்ற எனக்கு அருத்தமுமில்லை அனர்த்தமுமில்லை நடக்கச்சே இருக்கச்சே நித்திரை போகச்சேயும் நான் இதரசுகமாயிருக்கின்றேன். (௫)

போகச்சே எனக்கு ஆனியுமில்லை எத்தனம்பண்ணுகின்றதிலே எனக்குச்சித்தியுமில்லை ஆகையால் நட்டமும் லாபமுமில்லாமலே யிதரசுகமாயிருக்கின்றேன். (௬)

சுகமுதலான ரூபாதிகளுடைய பாவம் விசாரித்துப்பார்த்து அதிலேச்பாசுபங்கள்விட்டுநான்இதரசுகத்தை அடைந்திருக்கின்றேன்.()

(பதின்மூன்ருவது இதரசுகசத்தகம் முற்றிற்று.)

---

## பதினன்காவது

## சாந்திசதுஷ்க்கம்.

பாவமெல்லாம் அக்ஞானபாவமென்றறிந்து நித்திரையிலே விழித்திருக்கின்ருப்போலே சமுசாரமில்லாமலே இருக்கின்றேன். ()

தானமேது சினேகிதாளேது விஷயமேது சாஸ்திரமேது விக்ஞானமேத இதுகளுடைய மகத்துவமெல்லாமறிந்து வாஞ்சைவிட்டயெனக்கு. (உ)

சாக்ஷியும் புருஷனுய்ப் பரமாத்மாவான ஈஸ்வரனை யறியச்சே பந்தமோக்ஷம் இரண்டுமில்லாதே போயிற்று முக்திக்காகச் சிந்தனை ஏதுக்கு. (௩)

உள்ளே ஒருவிகற்பமுமில்லாமல் வெளியிலே இதர இச்சையாகச் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றவனுடையசுபாவத்தைஅப்படிப்பட்டவன் அறிவானே அல்லாமற் பின்னையொருத்தன் அறியமாட்டான். (௪)

(பதினன்காவது சாந்திசதுஷ்க்கம் முற்றிற்று.)

---

## பதினைந்தாவது

# தத்துவவுபதேசவிம்சதி.

உள்ளபடி மகாத்மாவினுடைய தத்துவ உபதேசத்தினாலே தத்துவபுத்தி யுண்டானவனுக்கு கிருதார்த்தனாவன் தானாகச் ஜீவபரியந்தம் விசாரித்தாலு மறியமாட்டான். (க)

விஷயத்தைவிட்டதேமோக்ஷம் விஷயத்திற்கூடுகின்றதேபந்தம் இதுவே விசேஷஞானம் இதிலே உனக்குயெப்படித் தோணிற்றோ அப்படியேசெய். (உ)

நன்றாகப்பேசுகின்றவன் பிறக்ஞையுண்டானவன் நன்றாகஉத்தியோகம்செய்கின்றவன்இப்படிக்கொத்தவனை ஆமைபோலவும், பேயன்போலவும் இப்படிப்பண்ணும் தத்துவக்ஞானம் அவனைப் பிறகிருதாள் தங்களிலே கூட்டார்கள். (௩)

நீ சரீரமுமல்லஉனக்குச்சரீரமுமில்லை நீ கருத்தாவுமல்லப்போக்தாவுமல்ல நீ விசுவசாக்ஷி நீ சித்துரூபனா யாசையில்லாமற் சுகமாயிரு. (௪)

இராகத்துவேஷம்மனோதர்மம் உனக்குமனதுமில்லைவிகற்பமுமில்லை நீ போதசொரூபன் ஆகையால் விகாரமில்லாத சுகத்தைஅடை. (௫)

பூதங்களிலே தானிருக்கின்றேனென்றுந் தன்னிடத்திற் பூதங்களிருக்கிறதென்றுமறிந்து அகங்காரமும்மமதையும் விட்டுசுகத்தை அடையவும். (௬)

சமுத்திரத்திற் றிவலைகள்போலே எந்தவஸ்துவிலே இந்தச் ஜகத்துத் தோணிற்றோ அந்தவஸ்துவேநீ நீயேஞான சொரூபன் இதுவேசத்தியம் உன்மனதிலே தாபம்விட்டுவிடு. (௭)

தகப்பனேஈன்ருகத் திரிவிதகாணத்தினும் விசுவாசம்வை இதி ற்சமுசயமில்லை நீ சின்மாத்திரசொரூபன் பகவந்தனன் நீ மாயை க்கி அப்பாற்பட்ட ஆத்மா. (அ)

சரீரங்குணத்துடனே கூடினது வருகிறதும் போகிறதுமா யிரு க்கும் ஆத்மா போக்குவரத்தற்றவர் இதிலே ஏன் விசாரப்பட வேண் டும் தேகங்கற்பாந்திரமா இருக்கட்டும் அல்லது இப்போதேபோகட் டுஞ் சின்மாத்திரசொரூபமா யிருக்கின்ற உனக்கு ஆனிலாபமில்லை.

ஆனந்தசமுத்திரமாயிருக்கப்பட்ட உன்னிடத்திலே ஜகத்தெ ன்கின்ற அலையுண்டானுலும் லயமுண்டானுலும் உனக்கு ஆனிலா பமில்லாமலே இருப்பாய். (கo)

தகப்பனே சின்மாத்திரசொரூபமா யிருக்கின்ற உனக்குச் ஜக த்துச் சின்மாத்திரசொரூபமேயல்லாமல் வேறல்ல இப்படிப்பட்ட உனக்குவற்சிதம் அவற்சிதம் யெப்படிவரப்போகிறது. (கக)

ஒருத்தனுய் அவ்வியனுய்ச் சாந்தனுய்ச் சிதாகாசமாயிருக்கின்ற உனக்குச்சென்மமுமில்லைக் கருமமுமில்லை அகங்காரமுமில்லை. (கஉ)

நீ யென்னத்தைகண்டாலுமதிலே நீ யொருத்தனே தோணுகி ன்ருயல்லாமல் உன்னைத்தவிரச் சொர்னத்தைத்தவிரப் பூஷணம் வேறல்லாததுபோல. (கங)

இவனவனுனது இதுவென்கின்ற விகாரமெல்லாம் விட்டுச்சக லமும் ஆத்மாவேயென்கின்ற நிச்சயத்தினுலே சங்கற்பதேசில்லாமற் சுகமாயிரு. (கச)

உன்னுடைய அக்ஞானத்தினுலே ஜகத்துண்டாயிற்று பரமா ர்த்தனுக நீ யொருத்தனே சரிஆகையாற் சமுசாரியும் அசமுசாரியு ம் நீ யொருத்தனே. (கரு)

இந்தப்பிரபஞ்சம் பிரமைமாத்திரமே யல்லாமல் வேறென்றுங் காணேன் ஆகையால் நீ யொருவாசனையோடுங்கூடாமற் சின்மாத்திரமாய்ச் சுகமாயிரு. (கசு)

தம்பி நீயொருத்தனே சமுசாரமென்கின்ற சமுத்திரத்திலேமுன்னுமிருக்கின்றாய் இப்போதுமிருக்கின்றாயினிமேலுமிருக்கப்போகிறாயாகையாலுனக்கு பெந்தமோக்ஷங்களேயில்லை நீ கிருதகிருத்தியனேசரி. (கஎ)

சின்மயமாயிருக்கின்ற சித்தம்சங்கற்பங்களினாலே அலைப்பிக்காமல் அகங்காரம்விட்டு ஆனந்தசொரூபமாய்ச்சுகமாகயிரு. (கஅ)

நீ யெச்சரிக்கையாயிருஒன்றும்மனதிலேநினையாதே சத்தியமாய்ச்சொல்லுகின்றேன் நீயே ஆத்மசொரூபம் நீயே முக்த்தன் இனி அறிகின்றதென்னசெய்கின்றதென்ன. (கக)

(பதினைந்தாவது தத்துவவுபதேசவிம்சதி முற்றிற்று.)

ஒருசுலோகம்அபாவமென அறியவேண்டியது-

---

## பதினாறுவது
## உபதேசயேகாதெசம்.

தகப்பனே தினந்தோறும் நானாசாஸ்திரம் பார்த்தாலுங் கேட்டாலுஞ் சொன்னாலு முனக்குச்சாந்தி வரப்போகிறதில்லை ஆனபடியால் மனதிலேநினைக்கின்றது மறந்தாலொழிய சித்தத்திலே இச்சையானதுவிட்டுநிர்மல ஞானியாக யிருந்துகொண்டு கர்மஞ்செய்தாலும் யோகத்திலே யிருந்தாலுஞ் சமாதியிலேயிருந்தாலும் நல்லது.()

ஆயாசத்தினாலே துக்கஞ் சகலமும் இராகவசமாயிருக்கு மிதை மூடன் அறியான் விவேகியானவன் ஆயாசமில்லாமல் நாசமில்லாத பதத்தை யடைவான். (உ)

நிமிஷாநிமிஷமானாலும் வியாபாரம்விட்டு துக்கமில்லாமலெவனிருக்கின்றானோ அவனுக்குச் சுகமுண்டு வியாபாரத்துடனே கூடினவனுக்கு ஒருக்காலுஞ்சுகமில்லை. (௩)

இதுபண்ணினேன் பண்ணவில்லை யென்கின்றதே தொந்தம் எப்போமனதிலே இல்லாமற்போயிற்றோ அப்போது அந்தமனதுக்குத் தருமாதருமகருமமோக்ஷங்களுமில்லை. (௪)

விரக்தன்விஷயங்களுடனே கூடான் ராகியானவன் விஷயங்களைப் போகிப்பான் பந்தமோக்ஷமிரண்டுமில்லாதவன் ராகியுமல்ல விரக்தனுமல்ல. (௫)

தள்ளுகிறதிலுங் கிறிகிக்கிறத்திலும் நினைவு எவ்வளவுக்கு இருக்குமோ அவ்வளவுக்கும் ஞானத்திற்கு ஆனியுண்டு அதுவேசமுசாரவிருக்ஷத்துக்கு மூலை. (௬)

பிரவிருத்திகளிலே ராகாதிகளுண்டாமதையறிந்து குழந்தைபோலே தொந்தங்களில்லாமற் சுகமாயிரு. (௭)

ராகமுண்டானவன் துக்கநிவர்த்திக்காகச் சமுசாரம்விடவேண்டுமென்று நினைப்பான் ராகமில்லாதவன் துக்கமில்லாமலேயிருந்து சமுசாரம்விடவேண்டுமென்கின்றநினைவேயில்லை. (௮)

தேகத்திலேயும் மோக்ஷத்திலேயும் மமத்துவமிருக்கின்றவன் யோகியுமல்லஞானியுமல்ல அவேனபின்னும் துக்கமும் பெந்தமுமுண்டானவன். (௯)

அரிஅரபிரமாதிகளுனக்கு உபதேசங்கொடுத்தாலு முன்மனதிலேசகலமும்மறவாதேபோனாலுனக்குலாபமில்லை. (௧௦)

ஏகசுலோகம் அபாவமென்றறிக.

(பதினாறுவதுவிசேஷஉபதேசயேகாதேசம்முற்றிற்று.)

---

## பதினேழாவது

## தத்துவஉபதேசவிம்சதி.

திருப்தியடைந்தவன் இந்திரியசெயமுண்டானவன் ஆசையில்லாததத்துவசமனன் ஏகாங்கியாய் யாதொருத்த னிருக்கின்றானோ அந்தஞானி ஒருத்தருக்கு மெட்டப்படாத யோகஞான பலத்தையடைவான். (க)

இந்தஜகத்திலே தத்துவக்ஞானியானவன் விக்ஞானனந்தத்திலேசற்றாகிலுந் துக்கத்தை அடையான் அப்படிப்பட்டஒருத்தனாலே இந்தப்பிரமாண்டமண்டலம் பூரணமாகயிருக்கின்றது. (உ)

ஆத்மராமனா யிருக்கின்றவனை விஷயசுகஞ் சந்தோஷிக்கமாட்டாது அது எப்படியென்றால் நல்லகொழுந்துகள் தின்கின்ற யானையை வேப்பங்கொழுந்துகள் சந்தோஷிக்கப்பண்ண மாட்டாதது போலே. (ங)

அடையப்பட்டபோகங்களிலேயும் அடையப்படாத போகங்கங்களிலேயு மெவனாசத்தியில்லாம லிருக்கின்றானோ அவனே இந்தச் ஜகத்திலே கிடையாதவன். (சு)

சமுசாரியானவன் போகமெப்போவருமென்று இச்சித்திருப்பானோ அப்படியே முமுட்சுமோக்ஷ மெப்போதுவருமென்று இச்சிப்பன். (ரு)

போகமோக்ஷமிரண்டிலு மிச்சையில்லாதவனே சாக்ஷாத்காரமான பிரமம் அவனே மகாத்மா. (சா)

தருமார்த்தகாமமோக்ஷங்களிலும் ஜீவத்துவத்திலு மிருதத்திலுங் கிறிகிக்கிறத்திலும் விடுகிறத்திலும் இச்சையில்லாம லெந்தத்

தயிரியபுருஷ னிருக்கின்றானோ அவன் இந்தலோகத்திலே கிடையாதவன். (எ)

இந்தவிசுவமெல்லாம் லயமானாலுஞ் சந்தோஷமில்லாமல்நிறைந்திருந்தாற் றுக்கமுமில்லாம லிப்படி மகாசுகத்தை அடைந்ததீரன் ஒருத்தனுகவேசஞ்சரிப்பன் அப்படிப்பட்ட ஞானத்திலே கிருதார்த்தன் ஆசையில்லாதபுருஷன் புத்திவிகற்பமெல்லாம் விட்டுப் பார்க்கச்சே கேட்கச்சேகிராணமறியச்சே ரசணையறியச்சே ஆறுகின்ற தறியச்சே எதார்த்த சுகத்தை அடைந்தே யிருப்பன். (அ)

சமுசாரசாகரத்தைக்கடந்திருக்கின்ற யோகிக்கி விரக்தியுமில்லை சந்தோஷமுமில்லை இந்திரியப் பிரவிர்த்தியுமில்லை திஷ்டியமில்லை. (கூ)

நித்திரையுமில்லை சாக்கிறமுமில்லை கண்மூடுகின்றதுமில்லை துறக்கின்றதுமில்லை ஓகோ இப்படிப்பட்ட வவஸ்தை முத்திசேதனனுக்கேசொல்லும். (க0)

ஒருத்தனை நிந்திக்கிறதுமில்லை புகழ்கிறதுமில்லை சந்தோஷமுமில்லை கோபமுமில்லை கொடுக்கிறதுமில்லை வாங்கிறதுமில்லை இப்படியொன்றிலும் ஆசையில்லாதவன் ஜீவன்முக்தன். (கக)

ஜீவன்முக்தனுனமகாத்துமா பிரியவஸ்துவிலே சந்தோஷியான் மிருத்து கிட்டவந்தாலுங் கலக்கப்படான் எப்போதும் யெதார்த்தமாகவே இருப்பன். (கஉ)

சர்வத்திரசமதிருஷ்டியுண்டான தீரனுக்கு புருஷனிடத்திலும் ஸ்த்திரீயினிடத்திலுஞ் சுகதுக்கம் ஆபத்துச்சம்பத்துகளினும்ஏதத்தாக்ஷியில்லாமற்சுகமாகஇருப்பன். (கங)

சமுசாரசீரணமான புருஷனுக்குமிசையுமில்லை தயையுமில்லை இருபையுமில்லை ஈனத்துவமுமில்லை சந்தோஷமுமில்லை துக்கமுமில்லை. (கச)

சித்தமெதிலுங்கூடாத சிற்சொரூபன் விஷயமுண்டானவனுமல்ல இல்லாதவனுமல்ல பெத்தனுமல்ல முக்தனுமல்ல பிரார்த்தியானத்திற் சந்தோஷித்துக்கொண்டிருப்பன். (கரு)

சமாதானமில்லாமற் சூனியசித்தனானபுருஷன் மோக்ஷம்வந்து முன்னேநின்றாலுமறியான். (கசு)

மோகம் அகங்காரமில்லாமற் சகலத்தையும் விட்டுவிட்ட யோகீஸ்வரன் ஏதுசெய்தாலு மதின்பலத்தையடையான். (கஎ)

மனதில்லாதவனாய் மோகஞ்சொற்பனசெடத்துவமில்லாதவனா யொவ்வொரு மகாபுருஷன் மஹாத்மத்தை யறிந்து லோகத்திலே சஞ்சரிப்பன். (கஅ)

(பதினேழாவது தத்துவவுபதேச விம்சதி முற்றிற்று.)

---

## பதினெட்டாவது.

## சமம்சமன்சதகம்.

எவனுக்கு எந்தமட்டுக்கு ஞானமுதயமாகிறதோ அவ்வளவுக்குப்பிரமை சொற்பனம்போலே பிரமிக்கப்பண்ணும் அப்படிப்பட்ட கேவல சுகசொரூபமாய்ச் சாந்தமாயிருக்கின்றதே இதுக்கு நமஸ்காரம். (க)

சகலபதார்த்தங்களு மாற்சித்துத் தனக்கு வேண்டிய போகங்களெல்லாமநுபவித்தும் புத்திவந்தனானவன் சீக்கிரமாக அதைவிட்டுவிட்டாலொழியச்சுகங்காணமாட்டான். (உ)

சமுசாரமென்கின்ற கோடைகாலத்துவெய்யலிலே தெத்தமான வனுக்கு எந்தவிதத்திலேயுஞ்சமமென்கின்ற அமிர்தவருஷத்தினுலே நனைத்தாலொழியக் குளிராமைபொருந்திச் சுகத்தை அடையமாட்டான். (ரு)

ஜகத்து பாவனைமாத்திரமேஅல்லாமற் பரமார்த்தமாகப் பின்னையொன்றையுங்காணேன் பாவாபாவமெப்பேதும் விவேகித்துஅறிகிறவன் சுபாவமடைவன் ஆத்மபதத்தை அடைந்தவனுக்கும் அதுதூர்வுமல்லக் கிட்ட வுமல்ல நிர்விகற்பம் நிராயாசம் நிராகாரம் நிரஞ்சனமாக இருக்கும். (ச)

மோகத்தைமாத்திரம் விட்டுச் சொரூபவாசனையடைந்த புத்திவந்தன் சமுசயர்தீர்ந்த தெளிவிலே சற்றுகிலுந் துக்கமடையான்.()

இந்தஜகத்துக் கற்பனுமாத்திரம் ஆத்மா நித்தியமுக்தனென்று அறிந்ததீரன் சமுசயமில்லாதவனுகையால் குழந்தைபோலும் ஒன்றுலும் பற்றுதலில்லை. (சு)

தானே பிரமமென்றறிந்து உண்டானது மில்லாதது மிரண்டுங்கற்பிதமென்று நிச்சயித்து நிஷ்காமனு யிருக்கின்றவனுக்கு அறிகிறதுமில்லை சொல்லுகிறதுமில்லை கிரியையுமில்லை. (எ)

இதுநான் இதுநானல்ல வென்கின்ற விகற்பமில்லாமற் சகலமும் பிரமமேயென்கிற நிச்சயத்தினுலே உத்தமமானயோகி சும்மா இருப்பன். (அ)

உபசாந்தமுண்டானயோகீசுரனுக்கு விக்ஷேபமுமில்லை விரக்தியுமில்லை தெளிவுமில்லை மூடமுமில்லை சுகமுமில்லை துக்கமுமில்லை. (கூ)

தன்னுடைய ராச்சியத்திலும் பிக்ஷாவிர்த்தியிலு முண்டாமை யில்லாமையிலும் சனங்களிலும் வனத்திலும் நிர்விகற்பமான யோகீசுரன் ஒன்றாகவேயிருப்பன். (கா)

தொந்தங்களில்லாத யோகிக்குத் தருமமேது அதர்ம்மமேது காமமேது விகற்பமேது இதுலபித்தது இதுலபிக்கவில்லை யென்கின்றதேது. (கக)

செய்யவேண்டிய காரியமுமில்லை மனதுச்குஇஷ்டமான காரியமுமில்லை எதாலாபமாக ஜீவனம்பண்ணிக்கொண்டு ஜீவன் முக்தனானயோகி சிற்சொரூபமாக இருப்பன். (கஉ)

சாந்தமாய்ச் சகலசங்கற்பமும் விட்டுப்போன யோகீசுரனுக்குப் பிரபஞ்சமேது மோகப்பிராந்தியேதுதியானமேது முக்தியேது.()

பிரமத்தைப் பார்க்கின்ற மனதுண்டானவனுக்கு நானே பிரமமென்று சிந்திக்கலாம் இவ்வண்ணமே வஸ்துவைக்காணாத நிர்மலமனதுண்டானவன் என்னத்தைசிந்திக்கப்போறான். (கச)

ஆத்மவிட்க்ஷேபமுண்டானவன் சரீரமும்மனதும் நிரோதனம் பண்ணவேண்டும் தயிரியமுண்டானபுருஷனுக்குச் சாதிக்கவேண்டியதொன்றுமில்லை விட்க்ஷேபமுமில்லை. (கரு)

தயிரியபுருஷன் லோகவிருத்தமாய்லோகத்தார்போலே சஞ்சரிப்பன் அதுக்குள்ளானவனல்ல அவனுக்குச்சமாதியுமில்லை விட்க்ஷேபமுமில்லை. (கசு)

பாவாபாவமறியாமலொருவாசனையோடுங் கூடாம லிருக்கின்ற யோகிலோகதிஷ்ட்டிக்கிக்கருமஞ்செய்தாலுஞ் செய்தவனல்ல. (கஎ)

தயிரியபுருஷனுக்குப் பிரவிர்த்தி நிவிர்த்திகளிலே ஆக்கிறகமில்லைவேண்டியதைப்பண்ணிக்கொண்டு ஒன்றிலும் பற்றில்லாமற்சுகமா இருப்பன். (கஅ)

விவேகியானவன் சகலவாசனைகளிலும் விடுபெட்டுபாவமில்லாமல் பந்தமுக்தனாய்ச் சுகமாகயிருந்துகொண்டு சமுசாரமென்கின்ற வாயுவினாலே காஞ்சயிலைபோலேசஞ்சரிப்பன். (ககூ)

சமுசார துக்கங்க ளாயிரம்வந்தாலுஞ் சம்பந்தங்கள் வந்தாலுஞ் சுகதுக்கங்கள் தோணுமலெப்போதுஞ் சாந்தசித்த முண்டானவன் விதேகிபோலே பிரகாசிப்பன். (உ0)

மனது சாந்தமடைந்து ஆத்மராமனாய்த் தயிரியபுருஷனான மகாத்மா சாகிறதும் பிழைக்கிறது மிரண்டுமில்லாமலிருப்பன். (உக)

எதார்த்தமாகச் சூனியசித்தனாய் இச்சையில்லாத தயிரியபுருஷன் என்னத்தைச்செய்தாலும் அக்ஞானிபோலே மானவமானத்திலே கட்டுப்படான். (உஉ)

சகலகருமங்களுஞ் சரீரம்பண்ணுகின்றது சுத்தசொரூபனாயிருக்கின்ற நான் ஒருகருமமும் பண்ணவில்லையென்கின்ற ஞானி சகல கருமங்களும் பண்ணியும் பண்ணாதவனே. (உந)

மூடன் எந்தவிதிகருமம் பண்ணினாலும் பெத்தனே அல்லாமற் கிருதகிருத்தியனாக மாட்டான் ஜீவன்முக்தன் எந்தக்கருமம் பண்ணினாலுஞ் சுகமநுபவிப்பன். (உச)

புத்திவந்தனானவன் நானாவிகாரம் விட்டுக் கலக்கமில்லாமல் ஒன்றுநினையாமற் றன்மயமாய் வேறேயொன்றறியாமற் கேளாமலிருப்பன். (உரு)

சமாதியுமில்லை விட்சேபமுமில்லை தான்முமூக்ஷுவுமல்ல அன்னியனுமல்ல கற்பனைவிருத்தி நாசங்களுண்டானாலும் அகர்த்தாவானவன் எப்போதும் மகாத்மாவாகவே இருப்பன். (உகூ)

உள்ளே அகங்காரத்துடனே இருக்கின்றவன் கருமஞ்செய்யாதிருந்தாலுஞ் செய்தவனே அகங்காரமில்லாததீரன் செய்துஞ்செய்யாதவனே. (உஎ)

முக்தனானபுருஷனுடைய சித்தங்கலங்காது அசையாதுசந்தோஷப்படாது சமுசயமிராது ஒருகருமமும்பண்ணாது. (உஅ)

தியானியாது சேஷ்ட்டைபண்ணாது சிற்சொரூபமான சித்தம் யென்னத்துக்காகச் சேஷ்ட்டைபண்ணுகின்றது எது நிமித்தியந் தியானம்பண்ணுகின்றது. (உகூ)

மூடனானவன் தத்துவத்தைக்கேட்டு மூடபாவத்தையேயடைவன்விவேகியானவன்சமுசயமுண்டானாலும் எதார்த்தமாகவேயிருப்பானேயல்லாமல் மூடன்போலேபோகான். (௩0)

மூடரானபேர் யேகாக்கிரசித்தமும் வாயுநிரோதமும்அப்பியாசமென்றுபண்ணுவார்கள் தீரபுருஷனானவன் ஒருகருமமும்பண்ணான் நித்திரையிலேசொற்பனசேட்டைபோல இருப்பன். (௩க)

மூடனானவன் எத்தனம்பண்ணினாலும் பண்ணாதிருந்தாலுமுக்தியடையமாட்டான் பிறக்ஞையுண்டானவன் தத்துவநிச்சயத்தினாலேமோக்ஷத்தையடைவான். (௩உ)

நிர்மலமாய்ப் பரிபூரணமாத்திரநிட்பிரபஞ்சனாய்ப் பிரியசொரூபனாய் ஆனந்தனாய் நிராமயனாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றபரமாத்மாவைமூடாளானபேரப்பியாசம்பண்ணியும்அறியமாட்டாள்.

அப்பியாசரூபமான கருமத்தினாலே மூடனானவன் மோக்ஷமடையமாட்டான் விவேகியானவன் ஞானமாத்திரத்தினாலே கிரியையில்லாமல் முக்தியையடைவான். (௩ச)

பிரமத்தை யடைகின்றேனென்று மூடனானவன் நினைத்து அடையமாட்டான் தீரனான புருஷனானவன் நினையாமலே பிரம சொரூபத்தையடைவான். (௩௫)

அகங்காரயுத்தமான சனங்க ளாச்சரியமில்லாமலே சமுசார விருக்ஷத்தைப் போஷணைபண்ணுவார்கள் புத்திவந்தனானவன் சமு சாரம்ஆதியந்தந் துக்கமானபடியினாலே அதினுடையமூலத்தை விவேகமென்கின்ற கோடாலியாலே வெட்டிப்போடுவார்கள். (௩௬)

மூடனானவன் எத்தனைநியமம் பண்ணினாலுஞ் சாந்தியடைய மாட்டான் தீரபுருஷனானவன் தத்துவநிச்சயம் பண்ணிச் சகலத்தை யுமறிந்து எப்போதுஞ் சாந்தனாயிருப்பன். (௩௭)

வாகிய திஷ்டியினாலே பிரமத்தைப் பார்ப்போமென்கிறவனு டைய எத்தனம் விருதாவெத்தனம் அதை விக்ஞானியாய் யிருக் கின்றபேர்கள் கைப்பிடியார்கள் தன்னை அவ்வியனாகவே யெப்போ தும் பார்ப்பன். (௩௮)

மூடனானவன்சரீரத்தைப் பிடித்துக்கொண்டிருந்ததினாலேதத் துவயோகத்தைஅடையமாட்டான் தீரனுக்குக் கிரியைவிட்டுவிட்ட தேமனோநிரோதனம். (௩௯)

ஒருத்தன்மனதிலே என்நேரமும் பாவனைபண்ணுவன் பின் னையொருத்தன் பாவனை பண்ணாதிருப்பன் இந்தவிரண்டும்விட்டவ னே முக்திசுகத்தையடைவன். (௪0)

கேவலம் அசுத்தமான தொய்தத்தைப் புத்தியீனர் பாவனைபூண் ணுவார்கள் அப்படி சிவன்பரியந்தம் பாவனைபண்ணினாலு முக்தி அடையமாட்டார்கள். (௪௧)

மோக்ஷ இச்சையுண்டானவனுக்குப் புத்திசாலம்பமாக இருக்கும் நித்தியமுக்தனான நிஷ்காமனுக்குப்புத்தி நிராலம்பமாகயிருக்கும் விஷயமென்கின்ற காட்டைப்பார்த்துச் சனங்கள்பயந்து விஷய நிரோதமாகிறதர்குஞானத்தைச் சரணமடைந்தார்கள். (சஉ)

நிர்வாசனைஎன்கின்ற சிங்கத்தைப் பார்த்து விஷயமென்கின்ற யானை நிருவிக்கமாட்டாமற்பயந்தோடிப்போம். (சங)

சமுசயந்தீர்ந்து யுத்தசித்தனுனவன்முக்தித்திசையையடைந்து சந்தோஷிப்பன்பார்கச்சேகேட்கச்சே பரிசமறியச்சே ஆக்கிராணமறியச்சே ரசனைஅறியச்சே பிரார்த்தியானத்தைக் கொண்டுசுகமாயிருப்பன். (சச)

புத்திவந்தனுனவன் வஸ்துவைச் சிரவணம்பண்ணின மாத்திரத்தினுலே நிச்சயந்தானுக இருப்பான் இது ஆசாரம் அனுசாரமென்றும் பாரான். (சரு)

எப்போதுயென்னசெய்யவேண்டுமோஅப்போதேசுபபலம் லபித்தாலுஞ் செய்துவிடுவன் குழந்தைகளைப்போலே. (சசு)

தனக்கெப்போதுங் கருத்தத்வபோக்தத்துவங்களில்லை யென்றறிந்தபுத்திவந்தனுனவனுக்குச் சகலசித்தவிருத்திகளும் அந்தக்ஷணமேநாசமடையும். (சஎ)

ஆசையில்லாமல் விக்ஞானநிதியாயிருக்கின்றவனுடைய புத்தி சவுமியமாக யிருக்கும் ஆசையுண்டான மூடனுடைய புத்தியெப்போதுங்குரூரமாயிருக்கும். (சஅ)

அத்தியந்தபோகமநுபவித்தாலுங் குகையிலேசஞ்சரித்தாலுங் கற்பனை இல்லாத யெதீசுரனுக்குப் பந்தமுக்திஇல்லை. (சகூ)

தயிரியவந்தனானபுருஷன் தெய்வத்தை சோஸ்த்திரியாளை தீர்த்தத்தை இராசாவை ஸ்திரீகளை பார்த்துத்தோத்திரம்பண்ணியும் ஒன்றோடுங் கூடாமலிருப்பன். (௫௦)

யோகீசுரனானவன் புத்திரகளத்திராள் தன்னுடைய கோத்திரவர்க்கந் தன்னைசேவித்தபேரெல்லாரும் அவன்பேயனென்று துரத்திவிட்டாலும் விசாரத்தைஅடையான். (௫௧)

திருத்தியடைந்ததினாலே சந்தோஷமுமில்லை துக்கம்வந்தபோது துக்கமில்லாமலுமிப்படிபட்ட ஆச்சரிய திருஷ்டியுண்டானபுருஷனை தம்பி அப்படிப்பட்டபேரேஅறிவார்கள். (௫௨)

தயிரியனானபுருஷன் சகசமாக நிராகாரியாய் சூனியாகாரியாய் அவிகாரியாய் நிராமயனாக இருக்கின்றான்ஆகையாற் சமுசாரகிருத்தியமொன்றுஞ்செய்யப்போகான் மூடபாவமுண்டானவன் கருமங்களைச்செய்யாதிருந்தாலுஞ் செய்தவனே. (௫௩)

சிற்சொருபமாகயிருக்கின்றவன் செய்யாமலிருந்தும் லோகத்தார்போலேவியாகூலமில்லை. (௫௪)

சாந்தபுருஷனானவன் சகலவிவகாரத்திலே இருந்தாலுஞ்சுகமே அநுபவிப்பன் சுகமாகவேவருவன் சுகமாகவேபோவன் சுகமாகவே படுத்துகொள்வன்சுகமாகவேபேசுவன்சுகமாகவே அநுபவிப்பன். ()

விவேகபுருஷனானவன் லோகத்தார்போலே துக்கத்தைஅடையான் மனதிலேசலனமில்லாமல் நிறைந்தசமுத்திரம்போலே இருப்பன். (௫௬)

மூடனுக்குநிவிருத்தி வந்தாலும்பிரவிருத்திமார்க்கமேபோம்நிர்மல சித்தமுண்டானவனுக்குப் பிரவிருத்தியுண்டானாலும்நிவிருத்திப் பலமேஅடைவன். (௫௭)

மூடனானவன் வைராக்கியம்கொண்டிருப்பன் சரீரமில்லாமற் போகிறவிடத்தில் ராகமெங்கே மூடனுக்குப் பாவனைபாவிக்கின்றவி டதிலந்ததிருஷ்டி தெளிவிக்குவாராது ஞானபுருஷனுக்குப் பாவிக்க த்தக்கபாவனை நிர்மலமாகச் சூனியதிருஷ்டியாம். (௫௮)

குழந்தைபோலே சகலத்திலும் நிஷ்காமனாயிருக்கின்ற முனீசுர ன்சகலகருமங்களையும்பண்ணியும்ஒருகருமத்தையுமடையான் சகல பாவங்களிலும் சமத்துவமாயிருக்கின்ற மகாத்துமா ஆத்மக்ஞானத்தி னால் பார்க்கச்சே கேட்கச்சே ஆக்கிராணிக்கச்சே பரிசமறியச்சே சூனியசித்தனாய்ச்சுகமேயநுபவிப்பன். (௫௯)

ஆகாசம்போலே எப்போதும் நிர்விகற்பமாயிருக்கின்ற தீர புருஷனுக்கு மறப்பெங்கே சாதிக்கப்பட்டதெங்கே சாதனையெங்கே.

பரமமாய் ஆனந்தரூபத்திலே இருந்தும் -பிரவிருத்தியில்லாத விவேகிக்குப் பந்தமோக்ஷங்களில்லை அநுஷ விஷாதமுமில்லை. ( )

இடைவிடாமற் குரூரமாகாமல் யாதொருத்தனுக்குச் சமாதி அப்பியாசமிருக்கிறதோ அவனே சலனமில்லாத நிச்சலசொரூபன் அவனே பூரணன் அவனே ஆப்தசன்னியாசியென்னப்படும். (௬௨)

அய்யா வெகுபாவிக்கியென்னத்துக்குச்சொல்லவேண்டும் ஆத் மதத்துவத்தை அறிந்தமகாத்மா போகமோக்ஷங்களிலே காங்கிஷை யான் எல்லாத்திலு நிரஞ்சனனாகவே யிருப்பன். (௬௩)

தொய்தமாயிருக்கின்ற மகதாதிசகத்து சின்மாத்திர சொரூப மாக விசரி விம்பித்திருக்கிறது அதைவிட்டுச் சுகபோத சொரூபமா யிருக்கின்ற மகாத்மாவுக்குச் செய்யவேண்டியகாரியம் ஒன்றுமில்லை.

இந்தப்பிரபஞ்சம் பிரமைமாத்திரம் பிரமை விட்டுவிட்டால் ஒன்றுமில்லையென்றறிந்த சிற்சொரூபன் சுபாவமாகச் சாந்தியை அடைவான். (௬௫)

ஆபாசமாகவிருக்கின்ற திரிசியத்தைப்பாராமல்விமலபோதசொமாயிருக்கின்றவனுக்கு விதிநிஷேதமுமில்லை சாந்தியுமில்லை ராகவிகாரங்களுமில்லை. (௬௬)

புத்திவந்தனானமகாத்துமா புத்திகற்பிதமானசமுசாரம் மாயாமயமாத்திரமென்றறிந்து மோகம்அகங்காரம் ஆசைமுதலானதும்விட்டுப்போட்டுச்சுகமாயிருப்பன். (௬௭)

நாசமில்லாத ஆத்மக்ஞானிக்கி விசுவமாயறிகிறது மாயையென்றும் அகங்காரத்துவமுதலானது மில்லாமலிருப்பன். (௬௮)

மகாத்துமாவாயிருக்கின்ற புருஷன் க்ஷணமாத்திரமானாலும் ஆத்மவிரோதமானகருமங்கள் விருதாக்கதைகள் நிட்சாரமென்றறிந்து வாசிக்கான். (௬௯)

மூடனானவன் தத்துவத்தைச்சிரவணம்பண்ணியும் அதின்விசேஷமறியமட்டாமல் விஷயங்களுடனேகூடிமூடத்துவமே அடைவன் ஞானத்தினாலே விடுபட்ட கன்மமுண்டானவன்லோகத்தார் போலே தானுங்கருமஞ் செய்வான் பலனிச்சியான் ஒன்றுஞ்சொல்லப்போகான். (௭௰)

சற்றும்மனதிலேகலக்கமில்லாமல் நிர்விகற்பமாயிருக்கின்ற மகாத்துமாவுக்கு இருட்டுமில்லை வெளிச்சமுமில்லை லயமுமில்லை பின்னையொன்றுமில்லை. (௭௧)

அனிர்வாச்சியமாயிருக்கின்ற சுபாவமான யோகிக்கித் தயிரியமுமில்லை விவேகமுமில்லை பயமுமில்லை. (௭௨)

யோகதிருஷ்டியினாலே கருமபலத்தை அடையாதவனுக்குச் சுவர்க்கமுமில்லை நரகமுமில்லை ஜீவன்முக்தியுமில்லை. (௭௩)

சாந்தியென்கின்ற அமிர்தத்தினாற்திருப்த்தியடைந்த தயிரியபுருஷனுக்கு லாபாலாபங்களிலே அனுஷவிஷாதங்களில்லை. (௭௪)

நிஷ்காமனுய்ச்சந்தோஷத்தை அடைந்த முனீசுரன் சாந்தனைப்பார்த்து பூசிக்கின்றதுமில்லை குரூரனைப்பார்த்து நிந்திக்கின்றதுமில்லை சுகதுக்கங்களில் சமனுய் ஒருகிரியையும் பண்ணுதிருப்பன். (எரு)

தைரிய புருஷனுனவன் சமுசாரம்விட்டான் தன்னைப்பார்க்கிறதுமில்லை சந்தோஷதுக்க தோஷங்களிலே விடுபட்டு பிழைத்தவனுமல்லச் செத்தவனுமல்ல. (எசு)

ஆசையில்லாமற் பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற மகாத்மாவுக்குப் புத்திராதிகளிலேசினேகமுமில்லை விஷயங்களிலே இச்சையுமில்லை. (எஎ)

தைரியபுருஷனுனவன் யெங்குஞ் சுகமாயிருப்பன் பதிதனைப்போலேயுமிருப்பன் எதாஇச்சையாகச் சஞ்சரிப்பன் சயனுதி சுகனுதிசுகங்களிலே ஆசக்திபண்ணுன். (எஅ)

சோபமான இடத்திற்சேர்ந்து ஒருவிஷயமும் அறியாமலிருக்கையிற் சரீரமுண்டானுலும் லயமானுலும் அந்தமகாத்மாவுக்கு அந்தச் சிந்தையில்லை. (எகூ)

சாந்தனுய் அன்னியமில்லாமல் இதரயிச்சை சஞ்சாரியாய் தொந்தரகிதனுய் சகல பூதங்களிலும் ஆசக்தியில்லாமல் மகாத்மாவான யோகியானவன் ரமிப்பான். (அ0)

சிதானந்தசொரூபமாயிருக்கின்ற மகாத்மாபொன்னும்மோடுஞ்சமமாகயெண்ணி மமத்துவ மில்லாமலிருதயக்கிரந்தியறுத்துப்போட்டு இராசத தாமதங்களில்லாமற் சுகமாயிருப்பன். (அக)

எப்போது முக்தாத்மாவாகித் திருப்தியடைந்த மகாத்மாவுக்கு ஒன்றிலேஅவதானமுமில்லை வாசனையுமில்லை அவனுக்குஇணை லோகத்திலேயொருத்தருமில்லை. (அஉ)

அறிந்துமறியாதிருப்பன் பார்த்தும்பாராதிருப்பன் சொல்லியுஞ்சொல்லாதிருப்பன் இப்படிபட்டநிர்வாசனை யுண்டானவனுக்குஇணையொருத்தருமில்லை. (அ௩)

பிச்சைக்காரனானாலும் இராஜாவானாலும் நிஷ்காமனாயிருக்கின்றவன்பிரகாசிப்பன் பாவங்களிலே கூடாத புத்தியாதொருத்தனுக்குண்டாகிறதோ அதுசுகயேதுவாம். (அச)

சகசமான கிருதார்த்தனான யோகீசுரனுக்குத்தத்துவ நிச்சயார்த்தம்விஸ்தாரமுமல்லக்கொஞ்சமுமல்ல. (அ௫)

துக்கத்தையடையாமல் நிராசையுடைத்தானவனாய் ஆத்மசொரூபத்திலே திருப்த்தியடைந்தவனாய் அந்தயோகரூபமான சுவாநுபவத்துக்குச் சமம்ஒன்றுமில்லை. (அ௬)

சுழுத்தியிலிருந்துஞ் சுழுத்தியடையான் சொற்பனத்தி லிருந்துஞ் சொற்பனமடையான் சாக்கிரத்திலிருந்துஞ் சாக்கிரமடையான் இப்படித் திருப்த்தியடைந்த தயிரியபுருஷன் மகிமை யொருத்தராலுஞ் சொல்லக்கூடாது. (அ௭)

ஞானபுருஷன் சிந்தித்துஞ் சிந்தித்தவனல்ல இந்திரியங்களுடனே கூடியுங் கூடினவனல்ல அகங்காரத்துடனே கூடியுங் கூடினவனல்ல. (அஅ)

விரக்தியுமல்ல ராகியுமல்ல சுகியுமல்ல துக்கியுமல்ல முமூட்சுவுமல்ல முக்தனுமல்ல பின்னை யொன்றுமல்ல. (அ௯)

சித்தவிட்சேபத்தை யடைந்து மடைந்தவனல்ல சமாதியிருந்துஞ் சமாதியுத்தனல்ல மூடனாகயிருந்தும் மூடனல்ல பண்டிதனாகயிருந்தும் பண்டிதனல்ல. (௯0)

முக்தனானவன் எப்போதும்போலே தீரமாகயிருப்பன் ஒருக்காலும்பெத்தனாகான் யெப்போதுஞ் சந்தோஷமடைந்து சர்வசமனா

ய்த் தன்னுடைய கிருத்தியாகிருத்தியம் நினையாதிருப்பன். (கூக)

தைரிய புருஷனானவனுக்கு துதிபண்ணினவன்பேரிலே சந்தோஷமுமில்லை நிந்தைபண்ணினவன்பேரிலே கோபமுமில்லை சாகின்றதிலும் பிழைக்கின்றதிலும் பயமோகங்களில்லை. (கூஉ)

சாந்தியடைந்தபுருஷனானவன் வனத்திலிருந்தாலுஞ் சனங்களிடத்திலிருந்தாலுஞ் சரியாகப்பார்ப்பன் எதாஇச்சையாகவேண்டிபடிசஞ்சரிப்பன். (கூங)

இதில்ஏழுசுலோகம் அபாவமெனஅறியவேண்டியது.

பதினெட்டாவதுசமம்சமன்சதகம் முற்றிற்று.

---

பத்தொன்பதாவது

## ஆத்மவிசிராந்திஅஷ்டகம்.

தத்துவக்ஞான மென்கின்ற கரணத்தினாலே சித்தத்திலேநாட்டியிருக்கின்ற அனுற்பூதவாசனையாகிற யெலும்புகளைப் பிடிங்கிபோட்டு நானிற்பயமாகயிருந்தேன். (க)

என்னுடையமகிமையினாலே யென்னிடத்திலிருக்கின்றயெனக்குத் தர்மார்த்தகாமங்களுமில்லை தொய்தாத்தொய்தங்களுமில்லை. (உ)

என்னுடையமகிமையினாலேஇருக்கின்றயெனக்குப்பூதபௌஷிகவர்த்தமானமுமில்லைஇருக்கின்றவிடமுமில்லைஇல்லாதவிடமுமில்லை.

என்னுடையமகிமையினாலேயிருக்கின்றயெனக்கு ஆத்மாவுமில்லை அனாத்மாவு மில்லை சுபாசுபங்களு மில்லை சிந்தையாசிந்தையுமில்லை.

என்னுடையமகிமையினாலே யிருக்கின்றயெனக்குச் சாக்கிரசொற்பன சுழூத்தியுமில்லை துரியமுமில்லை பயமுமில்லை. (ரு)

என்னுடையமகிமையினாலே யிருக்கின்ற எனக்குத் தூரமுமில்

லை சமீபமுமில்லை உள்ளுமில்லை புறம்புமில்லை தூலமுமில்லைசூக்கு மமுமில்லை. (௬)

என்னுடைய மகிமையினாலே யிருக்கின்ற யெனக்கு மரணமு மில்லை பிழைக்கின்றதுமில்லை லோகமுமில்லை லோககாரியமுமில்லை லயமுமில்லை சமாதியுமில்லை. (௭)

பரமாத்மாவினிடத்தி லிருக்கின்ற யெனக்கு இந்திரியங்களு டைய கதையும் போதும் யோகத்தினுடைய கதையும்போதும் ஞா னகதையும் போதும். (௮)

(பத்தொன்பதாவது ஆத்மவிசிராந்தி அஷ்டகம் முற்றிற்று.)

---

இருபதாவது

## ஜீவன்முக்திசதுர்த்தெசம்.

நிரஞ்சனமாயிருக்கின்ற எனக்குப் பூதங்களுமில்லை தேகமுமி ல்லை சித்தமுமில்லை இந்திரியங்களுமில்லை மனதுமில்லை சூனியமு மில்லை விரக்தியுமில்லை. (௧)

தொந்தமுக்தனா யிருக்கின்ற யெனக்குச் சாந்தியெங்கே விக் ஞானமெங்கே நிர்விஷயசித்தமெங்கே நியமமெங்கே திருப்தியெ ங்கே ஆசையெங்கே. (௨)

சொச்சொரூபமாயிருக்கின்ற யெனக்கு ஞானக்ஞானங்களெங் கே நானென்கின்றதெங்கே பந்தமோக்ஷமெங்கே. (௩)

எப்போதுஞ் சொபாவமாயிருக்கின்ற யெனக்குக் கர்த்தத்து வமெங்கே போக்தத்துவமெங்கே கிரியையில்லாத ஸ்மரணையெங் கே பரோக்ஷபலமெங்கே. (௪)

நிர்விஷயமாயிருக்கின்ற யெனக்குப்பிராரத்துவமெங்கே ஜீவன் முக்தியெங்கேவிதேகமுக்தியெங்கே. (௫)

அத்தொய்தமாயிருக்கின்றசொற்சொரூபத்திலே லோகமெங்கே முமுட்சுவெங்கே ஞானபோகங்களெங்கே பந்தமோக்ஷங்களெங்கே.

அத்தொய்தமா யிருக்கின்ற சொற்சொரூபத்திலே சிருட்டிசங்காரமெங்கே சாத்தியசாதனமெங்கே சாதகனெங்கே சித்தியெங்கே.

எப்போதும் சயமாகிய நிஷ்க்கிரியனாகவிருக்கின்ற யென்னிடத்திலே விட்க்ஷேபவைராக்கியமெங்கே போதைசெடத்துவமெங்கே பிறப்பெங்கேஅனுஷவிஷாதமெங்கே. (அ)

நிரஞ்சனமாயிருக்கின்ற யென்னிடத்திலே பிரமாதாவெங்கேபிரமாணபிரமேயமெங்கே பிரமையெங்கே சமமெங்கே அதிகமெங்கே கொஞ்சமெங்கே. (கூ)

ஆரோபிதமான இந்தவிவகாரமும் பரமார்த்தமுஞ் சுகதுக்கங்களு மிதுகளிலே விசாரமில்லாத யெனக்கு எங்கேயுண்டாம். (கo)

எப்போதும்நிர்மலமாயிருக்கின்ற யெனக்கு மாயையெங்கேமறப்பெங்கே பிரிதியெங்கே விரக்தியெங்கே சீவனெங்கே பிரமமெங்கே.

கூடஸ்தனாய் அகண்டமாத்திரமாயிருக்கின்ற யெனக்குப் பிரவிருத்தியெங்கே நிவிருத்தியெங்கே பந்தமெங்கே மோக்ஷமெங்கே.

நிருபாதிகசீவனாயிருக்கின்ற யெனக்குக்குருவெங்கே சிஷியனெங்கே உபதேசமெங்கே சாஸ்திரமெங்கே புருஷார்த்தமெங்கே. (கரு)

அமலஆத்மாவாயிருக்கின்றயெனக்கு உண்டென்கின்றதெங்கே இல்லையென்கின்றதெங்கே ஒன்றென்கின்றதெங்கேஇரண்டென்கின்றதெங்கேஇந்தவெகுபேச்சு என்னத்துக்குச் சொல்லவேண்டும். ()

(இருபதாவது ஜீவன்முக்திசதுர்த்தெசம்மூற்றிற்று)

ஆ சுலோகம்-உஅரு.

சர்வஞ்சின்மயம்.

அஷ்ட்டாவர்க்கிரர்கீதை முற்றுப்பெற்றது.